உ

சிவமயம்.




# துறவி



| | | |
|---|---|---|
| விஜய மலர் 1. | திங்கள் வெளியீடு. | ஆவணி இதழ் 1. |









## தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்,
## திருவண்ணாமலை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

பதிப்பாளர்:
சுவாமி. ஞானானந்தா;
சின்னமடம், எறும்பூர்.
வளையமாதேவி P.O. சிதம்பரம் தாலுகா.

வருட சந்தா ரூ. 2—0—0.

ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் வாரத்தில் வெளிவரும்.

உ



## பொருளடக்கம்.



---

உ

## தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்.

பார்த்திப ஆண்டு கார்த்திகைத் திங்கள் மூன்றாம் நாள் (15—11—1945) ஞாயிற்றுக்கிழமை, திருவண்ணாமலை ஈசானிய மடத்தில் தருமபுரம் ஆதீனத்தைச் சார்ந்த மௌனகுரு மடம் உயர்தவத்திரு. மௌனம். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகளின் தலைமையின்கீழ் "தமிழ்நாட்டுத் துறவிகள் சங்க" மாநாடு ஒன்று ஆரம்பிக்கப்பட்டது. தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும், பல துறவிகளும், இல்லறத்திலுள்ள சமயப் பெரியோர்களும், அன்பர்களுமாக சுமார் இரண்டாயிரம் பேர்கள் வரை மாநாட்டிற்கு வந்திருந்தார்கள். தலைவர் வரவேற்பு ஊர்வலம் காலை 8-மணிக்கு சாதுக்கள் சத்திரத்திலிருந்து கோயில் யானை மேளம் முதலிய விருதுகளுடன் மாடவீதியை வலம் வந்து ஈசானிய மடம் சென்றமர்ந்தது.

சென்னை சைவசித்தாந்த சமாசத் தலைவர், ம. பாலசுப்பிரமணிய முதலியார், B A. B.L. அவர்கள் மாநாட்டைத் திறப்புரையாற்றித் திறந்து வைத்தார்கள். சங்க நோக்கம், சங்கம் இன்றியமையாமை என்பதுபற்றி பல சாதுக்களும் புலவர் பெருமக்களும் சொற்பொழிவாற்றினார்கள். "தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்" நிறுவப்பெற்று அடியிற்கண்ட தீர்மானங்கள் சிற்சில திருத்தங்களுடன் எல்லோராலும் ஒப்புக்கொண்டு நிறைவேறப்பெற்றது.

---

50-1

ஓம்

# துறவி.

"திருவாக்கும் செய்கருமம் கைகூட்டுஞ் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும்—உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமுகத் தானைக்
காதலால் கூப்புவர்தம் கை,"

"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா
றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வர்க்கும் வாக்கிறந்த
பூரணமாய் மறைக்கப் பாலாய்
எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை
யிருந்தபடி இருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாமல்
நினைந்துபவத் தொடக்கை வெல்வாம்."

"தூயதமிழ் நாட்டுத் துறவிகள் சங்கமென்றும்
ஞாயிறுபோன் மக்களுக்கு நன்மைசெயத்—தாயாகும்
உண்ணு முலையாம் உமைசே ரொளிப்பிழம்பாம்
அண்ணு மலைதுணையா மால்."

---

# மதிப்புரை.

---

அமிழ்தினுமினிய நந் தண்டமிழ் நாட்டிற்குத் தற்காலம் வேண்டப்படுவதாய மொழிப்பற்றும் கடவுட்பற்றும் மக்களிடம் பரப்பவேண்டித் "தமிழ்நாட்டுத் துறவிகள் சங்க"த்திலிருந்து "துறவி" என்னும் பெயர் தாங்கிய ஓர் சிரிய திங்கட்டாள் வெளிவந்துள்ளது. இச் சங்கத்தைத் துவக்கி எட்டாண்டுகளாகியும், இவ்வாண்டில்தான் இத் திங்கள் வெளியீட்டை வெளியிட நேர்ந்தது இறைவனின் கருணையேயாகும். அவ்விறைவனின் கருணையையே துணையாக்கொண்டு இவ் விஜய ஆண்டு ஆவணித் திங்களில் துவக்கப்படுகிறது. இதனை வெளியிட முன் வந்துள்ள அருந்தொண்டர் அருட்டிரு. ஞானனந்த அடிகள்; வடமொழி, தமிழ், ஆங்கிலம் என்னும் மும்மொழியிலும் புலமை பெற்றவர்கள்; இசைஞான வாய்ப்பும் உடையவர்கள். சென்ற காலத்தில் மொழிப்பற்றும், கடவுட்பற்றும் பழுதிலாத் திறன்பெற்று வளர்ந்தோங்கியதுபோலவே, எதிர்காலத்தும் சிறப்புற்று விளங்க, நிகழ்காலத்து வினையாகிய அரும் பெருந் தொண்டைத் துவக்கியுள்ளார்கள். அவர்களைப் பல்லாண்டுகளாக நன்கறிவேன். இத் திங்கட்டாள் ஆத்திக மக்கள் ஒவ்வொருவரின் கரத்திற் றிகழவேண்டுவது மிகமிக அவசியம். தமிழ் மக்கள் நல்லொழுக்கத்துடன் இனிது வாழ இத் திங்கட்டாள் பேருதவி புரியுமென்று அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழும் கடவுட் பற்றும் தழைத்தினிதோங்குக. அன்பு ஓங்குக. இன்பம் வளர்க.

இங்ஙனம்,
கு. க. சதாசிவ அடிகள்,
தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத் தலைவர்.
எடையூர் P.O.
திருத்துறைப்பூண்டி தாலூகா.

திருவள்ளுவரில்லம்,
எடையூர்.
5—8—53.

50-1

உ

ஓம்

துறவி.

# இறைபணி நிற்றல்.

---

பதிப்பாளர்.

"இறை பணி நிற்றல்" என்பது இறைவனுடைய தொண்டிற் றளராது நிற்றல் எனப் பொருள்படும்.

இறை—மனிதராய்ப் பிறந்த நம்மில் ஒவ்வொருவரும் பல பிறவிகளுள் கிடைத்தற் கருமையாகிய இம் மனிதப் பிறவியைப் பெற்றதற்கு மகிழ்ந்து அதனுல் அடையக்கூடிய பயனைப் பெற முயல்வதே நம் கடனும். "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்ற நமது வாகீசரது திருவாக்கும்; இன்னும், "எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான் யாதினும் அரிதரிதுகாண். இப்பிறவி தப்பினுல் எப்பிறவி வாய்க்குமோ ஏது வருமோ அறிகிலேன்" என்ற தாயுமானுரது திருவாக்கும் நன்கு விளக்குகின்றன. வாய்த்த இப்பிறவியின் சிறப்பிலக் கணமான பகுத்தறிவைக் கொண்டு நம்மையும், நம்மைச் சுற்றியுள்ள உலகத்தையும் அறியுமிடத்து, ஒவ்வொரு தொழிலும் அதற்கென ஏற்பட்ட ஒரு விதியின் வழியே தொன்றுதொட்டு இன்றுவரை நடந்து வருகின்றது என்பதை உணர்கின்ருேம். அங்ஙனமாயின், இவ்விதிகளை ஒழுங்குபட வகுத்து இயக்கி வரும் ஒரு தலைவனது (எண்ணமும்) நினைப்பும் தோன்றுதல் இயல்பே. இன்று மக்களுக்குச் சிற்சில ஆற்றல்கள் இருந்தும், நினைத்ததையெல்லாம் நினைத்தபடியே முடிக்கும் ஆற்றல் இல்லாதவர்களாக மக்கள் இருக்கின்றனர். இதை விளக்கவே நமது ஔவைப் பிராட்டியாரும்,

"ஒன்றை நினைக்கின் அதுவொழிந்திட் டொன்ருகும்
அன்றி யதுவரினும் வந்தெய்தும்—ஒன்றை
நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளு மீசன் செயல்"

என மிகத் தெளிவாக மனிதனது ஆற்றலினெல்லையை அளவிட்டுக் காட்டுகின்ருர்கள். ஆனுல், இப்படி நிகழ்வதற்குக்

காரணம் என்னவென்று கேட்பவர்க்கு, இவ்வெண்பாவின் இறுதியில், "எனையாளும் ஈசன் செயல்" என்ற விடையைத் தந்திருக்கின்றார்கள்.

இவ்விதமாக எல்லாவற்றையும் ஆளுந் தன்மையையுடைய ஒருவனே, ஈசன், தலைவன், இறைவன், இறை என்று பலவாறு அழைக்கப்படுகின்றான் என்பது புலனாகின்றது.

இறுத்தல்=தங்குதல். இறை=எப்பொருளிலும் தங்குபவன்.

இறைவனதியல்பு—மக்களுள், நல்லவர் என்பவரிடத்தும் ஒரு சிறிது நல்லதல்லாதது காணப்படுதல் இயல்பு. எல்லார்க்கும் மேலவனான இறைவன்பால் அத் தீயது இல்லாது நல்லதே இருத்தல் இயல்பே. இதனாலேயே நம் ஞானசம்பந்தப் பெருமானும், "நன்றுடையானை தீயதிலானை" என்று அருளிச் செய்திருக்கின்றார் போலும். தீயது என்று எண்ணக்கூடியது அவ்விறைவன்பால் ஒன்றுமே கிடையாது என்பது புலனாகின்றது.

இறைவன் அங்குத்தான் உளன் இங்குத்தான் உளன் எனாதபடி எங்கும் நிறைந்தவன். ஆனால், எங்கும் நிறைந்துள்ள இவ்விறைவன், தன்னை மக்கள் உணரும் பொருட்டு, வடிவம் பல தாங்கிச் சிறப்பாகச் சிற்சில இடங்களில் கோயில் கொண்டருளுகின்றான். பற்பல வடிவங்களைத் தாங்கும்போது பற்பல நாமங்களையும் ஏற்கிறான். இதையே நம் மணிவாசகப் பெருமானும்,

"ஒருநாமம் ஓர்உருவம் ஒன்றுமில் லார்க்கு ஆயிரம்
திருநாமம் பாடி"

என்றும்,

வாகீசப் பெருந்தகையாரும், "எண்ணாயிர நூறுபெயராய் போற்றி', என்றும் கூறியுள்ளனர்.

பணி— பணி என்ற சொல், செய்கை, ஊழியம், கடன் என்று பலவாறு பொருள்படும். தொண்டு, கடமை என்ற பொருளில் (அதாவது ஆங்கிலத்தில் Duty என்ற பொருளில்) பணி என்ற தொன்று ஒவ்வொருவருக்கும் உளது.

இயற்கை யுலகத்தில் ஒரு சின்னஞ்சிறு ஈ முதல் பெரிய விலங்குகள் வரை தத்தம் பணியைச் செவ்வனே செய்து வருவதைக் காண்கிறோம். ஆனால், ஆறறிவுடைய மக்கட்குப்

50-1

பணியைச் செய்தல், செய்யாது வாளா கிடத்தல் என்ற இரு துறைகளும் உள்ளன. ஆனால், கருமம், கடன் அல்லது பணி என்ற ஒன்றை ஒவ்வொருவரும் செய்யவே கடமைப்பட்டுள்ளனர். இறைவனுக்குங்கூட, கடன் என்பது ஒன்று உண்டு என்கிறார் நமது திருநாவுக்கரசர். அக் கடன் யாதெனில், "அடியேனையுந் தாங்குதல்" அதாவது, தன்னை அடைந்தவர்களைக் காத்தலாகும். "சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனும்" என்று சிவஞானபோதத்தின் பத்தாஞ் சூத்திரத்தின் விளக்கத்திலும் கூறப்பட்டுள்ளதை நாம் அறிவோம். இறைவனது கடமை இதுவாயிருக்க, அவனது அடிமைகளாகிய நமது கடமை என்னவெனின் "பணிசெய்து கிடப்பதே"

"நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்அடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே"

என்று நம் வாக்கின் மன்னவனார் அருளிச்செய்திருக்கின்றார். "பணிசெய்து கிடப்பதே நமது கடமை" என்றதோர் உயர்ந்த வாழ்க்கை இலக்ஷியத்தை நமக்கு அறிவுறுத்துகின்றது. என்றும் பணியியற்றலே நமக்குத் தலைசிறந்த தொழிலாகும் என்பதை உணர்த்தவே இறுதியில் ஏகாரம் எழுந்தது. (இங்கு பணி என்றது தொண்டு என்ற பொருளில், ஆங்கிலத்தில் "Service" என்று பொருள்படும்.)

இனி, 'இறைபணி' என்ற தொகை இறைவனுக்கு உகந்த பணி என்று பொருள்படுமாயின், 'இறைபணி' யென்பது இரு வகைப்படும். ஒன்று, ஒருவன் பிற உயிர்களின் நன்மைக்காக உழைத்து அவைகளின் பொருட்டுத் தொண்டு செய்வதாம். மற்றொன்று, அவன் தனது உயிரின் முன்னேற்றத்திற்காகப் பற்றறுத்தல் முதலியன பயின்று, இறைவனை வழிபட்டுப் பிறவாமையை அடைய முயல்வதாகும்.

மேற்கூறிய இருவகைப் பணிகளையும் இடைவிடாது, தளர்ச்சியென்பது சிறிதும் இன்றிச் செயல்முறையில் ஆற்றி மறைந்த நாயன்மார்களின் வாழ்க்கைச் சரிதங்களைச் சேக்கிழார் பெருமான் திருவாக்கின் மூலம் பெரியபுராணத்தில் கண்டு களிக்கின்றோம்.

இவ்விதமாக இருவகைப்பட்ட இறைபணியினுள், ஒருவன் ஏனைய உயிர்களுக்கு அவனால் இயன்றவரை செய்யுந் தொண்டிற்கு அடிப்படையாவது அன்புதான்.

(தொடரும்)

௨

# தமிழும் துறவியரும்.

குக. சதாசிவ அடிகள்,
தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத் தலைவர்,
திருவள்ளுவரில்லம், எடையூர்.

"**தமிழ்**" ஓர் உயர்தனிச் செம்மொழி. இற்றைக்குச் பன்னீராயிரம் ஆண்டுகட்கு முன்னரே, இயலிசை கூத்தென முப்பாலால் வகுக்கப்பெற்றது. முதலிடை கடைச்சங்கங்களால் வகுக்கப்பெற்றது. சேர சோழ பாண்டியரெனும் மூவேந்தர்களால் பாதுகாக்கப்பெற்றது. அகத்தியர், தொல்காப்பியரிலக்கணத்தால் விளக்கப்பெற்றது. நால்வர்கள், ஆழ்வார்கள் தமிழால் நலமுறச் சிறப்பிக்கப்பெற்றது. "இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்" என்பது பிங்கலந்தை. "தமிழென்ப தினிமை நீர்மை" என்பது சூடாமணி.

தமிழ்: சிந்தைக் கினியது, செவிக் கினியது, வாய்க் கினியது. இத்தமிழை ஆதியில் அகத்தியருக் குணர்த்தியது சிவபெருமான்.

"ஆதியிற் றமிழ்நூ லகத்தியர்க் குணர்த்திய
மாதொரு பாகனை வழுத்துதும்
போத மெய்ஞ்ஞான நலம்பெறற் பொருட்டே"

என்பது தொல்காப்பியம் சேனாவரையம்.

அகத்தியர் தென்திசை நோக்கிப் புறப்படுமமயம், சிவபெருமானைத் தமிழிலக்கணத்தைத் தனக்கு அறிவிக்க வேண்டி விண்ணப்பித்துக்கொள்கின்றார்.

"விடைகொடு போவா னென்றை வேண்டின னெகுந் தேயம்
தொடைபெறு தமிழ்நா டன்று சொல்லுப வந்த நாட்டின்
இடையயில் மாந்த ரெல்லா மின்றமி ழாய்ந்து கேள்வி
யுடையவ ரென்ப கேட்டார்க் குத்தர முரைத்தல் வேண்டும்."

என்பது பரஞ்சோதியார் திருவிளையாடல். மற்றும்,

"உழக்குமறை நாலினு முயர்ந்துலக மோதும்
வழக்கினு மதிக்கவியி னும்மரபி னேடி
நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண்
தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்."

என்ற கம்பரும் கூறியுள்ளமையால் அறியக் கிடக்கின்றது.

இச் சிவபெருமானே மக்களை நன்னெறியி லுய்விப்பான் வேண்டி, "கல்லாடை மேற்புனைந்து யாமெல்லாம் வழுத்தும் துறவியானர்," என்று மாதவச் சிவஞான யோகிகளும் துறவு நிலையைப்பற்றிக் கூறியுள்ளார்.

தமிழே சிவம், சிவமே தமிழ் என்ற கருத்தையே,'கழாரம்பர்' பேரிசைச் சூத்திரத்தில்,

"தமிழ் சிவம் இனிமையெனுந் தனிப்பொருளாம்"
என்று கூறியுள்ளதினாலும், "நற்றமிழ் வல்ல" ஞானசம்பந்தப் பெருமானால் மாலைமாற்று, திருவெழுகூற்றிருக்கை, சுழிகுளம், ஏகபாதம் முதலிய பல பதிகங்களைத் தந்துதவினமையாலும் நன்குணரலாம்.

இவ் வருந்தமிழைக் கற்பனையூற்றிற் கலந்தளித்த சிவப் பிரகாசர், சாந்தலிங்கர், திருப்போரூர் சிதம்பர முனிவர், குகை நமச்சிவாயர், குருநமச்சிவாயர், குமாரதேவர், சிவஞானமுனிவர், கச்சியப்பமுனிவர், தொட்டிக்கலைச் சுப்பிரம்ணிய முனிவர், குமர குருபரர், தத்துவராய சொரூபானந்தர், இளங்கோவடிகள், இராமலிங்க வள்ளலார், நம்மாழ்வார் முதலிய எண்ணிறந்த துறவிப் பெரியார்கள் அருளிய அருந்தமிழ் நூற்கள் மிகப் பலவாகும்.

புரொபசர் 'மாக்ஸ்மில்லர்' (Maxmiller) மிகப் பெரிய பேரறிஞர்களாகிய 'பிளேடோ', 'கான்ந்த்' முதலியவர்களாலும், சிக்கறுத்துக் கூறமுடியாத தத்துவக் கருத்துக்களை மிகத் தெளிவாகக் கூறி விளக்கியுள்ளவர்கள் இந்தியநாட்டுத் துறவிப் பெருமக்களே என்று கூறியுள்ளார். இத்தகைய, 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராகிய' துறவிப் பெரியாரே சமயப்பணி, நாட்டுப் பணிக்கு உரியவர்களாவார்கள். இக் கருத்துக்கிணங்க "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்றார் நம் அப்பர் பெருமானும்.

அன்று "நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்." என்று கூறிய மாணிக்கவாசகரின் அருள்வாக்கிற் கிணங்க இன்று மிகப் பொருத்தமாயிருப்பதை உன்னியே இத் திங்கட்டாளை வெளியிடவேண்டியதாயிற்று. நம் நாட்டுப் பணிக்குரியவர் தூய துறவிகளேயாவர்.

---

உ

# ஞானம்.

---

(நீலகண்ட சுவாமிகள், ஆனந்தாச்சிரமம், சென்னை.)

ஞானம் என்பது அறிவு. அறிவு, உணர்வு, சித்து, சேதனம், சைதன்னியம் என்பன ஒருபொருட் சொற்கள். அந்த ஞானம்; சொரூபஞானம், விருத்திஞானம் என இரு வகைத்து.

அவற்றுள், சொரூபஞானம் என்பது சுத்த சேதனமாகிய பிரஹ்ம அபின்ன ஆன்மாவாம். அதுவே, வியாபக சாமானிய சைதன்னியம்; அஞ்ஞான விரோதியன்று.

இனி, விருத்திஞானம் என்பது இருக்கிறது என்னும் வியவகாரத்தி(வழக்கி)ற்கு ஏதுவாய அவித்தையின் அல்லது, அந்தக்கரணத்தின் பரிணாம வடிவ விருத்தியினால் அவச்சின்ன மான (சூழப்பட்ட) சேதனமாம்; அல்லது அச் சேதன சகித விருத்தியாம்.

இவண் பரிணாமம் என்றது விகாரமாம்; அதாவது, வேறுருவை அல்லது, நிலையை அடைவதாம். அது, பொன் பூணுருவையும், மண்குட வுருவையும், பால் தயிருருவையும் உறுதல் போலாம்.

"உபாதான (முதற்) காரணத்தின் சமான சத்தையுடைய வேற்றுருவம்" என்பது பரிணாம இலக்கணமாம். உபாதான காரணம், முதற் காரணம், சமவாயி காரணம் என்பன ஒரு பொருட் சொற்கள்.

முதற் காரணமாவது காரியத்தோடு ஒற்றுமையுடைய காரணம். ஒற்றுமை ஈண்டு, விட்டுநீங்காமையாம்; அதாவது, சமவாய சம்பந்தத்தால் எதனிடத்துக் காரியம் தோன்றி, எதனிடத்து நிலைத்து, எதனிடத்து ஒடுங்கு (அழியு) மோ அது அக் காரியத்திற்கு முதற் காரணமாம்.

மேலே, சத்தை என்றது இருப்பை; அதாவது குடமிருக்கிறது, படமி (துணியி) ருக்கிறது, நிலமிருக்கிறது, நீரிருக்கிறது என்றற் றொடக்கத்தனவற்றில், தொடர்ந்து தோற்றுகின்ற இருப்பே சத்தை எனப்படுவது.

அது பாரமார்த்திக சத்தை, வியாவகாரிக சத்தை, பிராதிபாசிக சத்தை என மூவகைத்து. அவற்றுள், பாரமார்த்திகமாவது முக்காலத்தும் பாதிக்கப் (பொய்யென்று நிச்சயிக்கப்) படாத சத்தை (இருப்பை) யாம். அத்தகையது சுத்தசிவம் (சுத்தப்பிரஹ்மம்.)

வியாவகாரிக சத்தையாவது தத்துவ ஞானத்தினலன்றி வேறெதனுலும் பொய்யென்று நிச்சயிக்கப்படாத சத்தையாம். அத்தகையன குடம், படம், (துணி) உடம்பாதியனவாம்.

பிராதிபாசிக சத்தையாவது தத்துவஞான மில்லாமலே பொய்யென்று நிச்சயிக்கப்படும் சத்தையாம். அத்தகையன இப்பிவெள்ளி, கயிற்றுப்பாம்பு, கட்டையிற் கள்வன் முதலனவாம்.

மண்ணின் பரிணாம காரியம் குடம். மண்ணாகிய உபாதான காரணம் வியாவகாரிக சத்தையுடையது. குடமாகிய காரியமும் வியாவகாரிய சத்தையுடையது. எனவே, உபாதானத்தின் சமான சத்தை (இருப்புப்) பரிணாம குடத்திற்குளது. மண், முன்னுள்ள பொடி அல்லது திரளை வடிவம் நீங்கி வேறுருவாய், அதாவது, பண்டியுருண்டு, வாய்குவிந்து, உள் வெளியுடைய வர்த்துலாகார (வட்டவடிவ) முடையதாயிருக்கின்றது. அதுவே அம்மண்ணின் வேற்றுருவாகிய காரிய குடமாம். ஆகவே, முதற் காரணத்தின் சமான சத்தையு (இருப்பு) டையவேற்றுருவம் என்னும் பரிணாம இலக்கணம் அக்குடத்திற் பொருந்துகின்றமை காண்க. இது தூலநோக்கால் இயம்பப்பட்டது. உண்மை நோக்கில் அக்குடம் விவர்த்த காரியமே. இதுபற்றிப் பின்னர்ப் பேசுவாம்.

அந்தர் + கரணம் = அந்தக்கரணம்; அந்தர் = உள்; கரணம் = கருவி; தூல உடலினுள்ளேயுள்ள கருவி என்பது அதன் திரண்ட பொருள். அவ் வந்தக்கரணம் தூல பூதங்களுள் ஒவ்வொன்றன் சத்துவ குணத்தில் ஒவ்வோரம்சம் எடுத்து ஒன்றுசேர்த்தலால் உண்டாய காரியமாம். அதனை அகங்காரத்தின் காரியம் என்பாருமுளர். நூல் பஞ்சின் காரியமாயினும், அதன் ஆடையாய காரியத்திற்குக் காரணமாதல்போல, அந்தக்கரணம் பஞ்சபூத காரியமாயினும் அதன் பரிணாமரூப விருத்தியாய காரியத்திற்குக் காரணமாம்.

அவ் வந்தக்கரணத்தின் பரிணாமரூப விருத்தி ஞானம் எங்ஙன் உண்டா? மெனிற் கூறுதும்:— ஓர் ஏரியிலுள்ள நீர் மடைவாயாற் புறம்போந்து வாய்க்கால்வழி யோடி வயலிற்புக்கு அவ் வடிவை அடைகின்றது. அஃதொப்பத் தூலவுடலாய

ஏரியிலுள்ள அந்தக்கரணமாகிய நீர் கண்ணாய மடைவாயால் வெளிப்போந்து, விடயம் வரை நீண்ட கண்ணின் பகுதியாய வாய்க்கால் வழியோடிக், குடமாகிய வயல்வடிவை அடைகின்றது. ஈண்டுக் கண், தன் கோளகையை (இருப்பிடத்தை) விடாமல், ரப்பர் நீள்வதுபோல் நீண்டு குடமாகிய விடயத்தோடு சம்பந்திக்கின்றது. இதனையே மேலே, கண்ணின் நீண்ட பகுதியாய வாய்க்கால் என்றும்.

இங்ஙன் அடைந்த அவ் வந்தக்கரணத்தின் வேற்றுருவை அந்தக்கரண விருத்தி என்பர். எங்கும் நிறைந்த வியாபக ஆகாயம் குடத்திலும் நிறைந்துளது. அக்குடத்தினால் வரையப் பட்ட ஆகாயம் குடாவச்சின்ன ஆகாயம் எனப்படும். அஃதொப்ப, எங்கும் நிறைந்த சேதனம் அவ்விருத்தியிலும் நிறைந்துள்ளது. அவ் விருத்தியினாற் சூழப்பட்ட சேதனம் விருத்தி அவச்சின்ன சேதனம் எனப்படும்.

அவச்சின்னமெனினும் அவச்சேத்தியமெனினும் ஒக்கும். அவச்சின்னம் என்பதற்கு வரையப்பட்டது என்பது பொருள். வரையப்பட்டது, சூழப்பட்டது, வேறு பிரிக்கப் பட்டது, எல்லைப்படுத்தப்பட்டது என்பன ஒருபொருட் சொற்கள். வேறு பிரிப்பது, அதாவது அங்ஙன் பிரிக்கும் வினைமுதல் அவச்சேதகம் எனப்படும். அஃதீண்டு அந்தக் கரண விருத்தியாம். வரைதலாகிய தொழில் அவச்சேதம் எனப்படும்.

சடமாகிய அந்தக்கரண விருத்திக்கு, ஞானம் என்னும் பெயரில்லை; அறிவுவடிவ சேதனத்திற்கே அப்பெயர் உண்டு. அச் சேதனத்தின் அவச்சேதகமாகும் சம்பந்தத்தால் அச் சட விருத்திக்கும் அப்பெயர் உபசாரமாய் வழங்கப்படுகின்றது.

மேற்கூறிய விருத்திஞானத்தின் இலக்கணம் குற்றமின்றியதாம். இலக்கணத்து இயையும் குற்றம் அதிவியாப்தி, அவ்வியாப்தி, அசம்பவம் என மூவகைத்து.

அவற்றுள், அதிவியாப்தி என்பது அதிக இடத்தில் வியாபித்திருப்பது. அதாவது, ஒன்றற்குச் சொன்ன இலக்கணம் அதனில் இருப்பதுமன்றிப் பிறவற்றிலு மிருப்பின், அது அதிவியாப்திக் குற்றமுடைய இலக்கணமாம். அது கொம்பில்லாதது குதிரை எனின், அக்கொம்பில்லாமை இலக்கணம் குதிரையிலேயன்றிக் கோவேறுகழுதையினு மிருத்தல் போலாம்.

அவ்வியாப்தி என்பது வியாபியாதிருப்பது; அதாவது ஒன்றற்குச் சொன்ன இலக்கணம் அதனில் அல்லது அவ் விலக்ஷிய முழுதினும் வியாபித்திராமல் அதன் ஏகதேசத்து (ஒரு பகுதியில்) இருத்தலாம். அது, ஆரமு (அதளு) டையது ஆடு எனின், ஆரமுடைமையாய இலக்கணம் எல்லா ஆடுக ளிலும் வியாபித்திராமல், சிலவற்றில் மாத்திரம் இருத்தல் போலாம்.

ஈண்டு இலக்ஷியம் என்றது இலக்கணம் எதற்குக் கூறப் படுகின்றதோ, அல்லது இலக்கணத்தால் எது அறியப்படு கின்றதோ அதுவாம். ஆரமுடைமையாய இலக்கணத்தை யுடையது, அல்லது அவ்விலக்கணத்தால் அறியப்படுவது ஆடாகலின், ஆடு இலக்ஷியமாம். ஆரம் என்பது இங்கு அதளாம்; அதாவது ஆட்டின் கழுத்தில் குஞ்சம்போல் தொங் கும் தசை முடிச்சாம். அது ஆடுகள் அனைத்திலுமிராமல் சில ஆட்டின் மாத்திரமிருக்கும்.

அசம்பவம் என்பது பொருந்தாமை. அதாவது, சொன்ன இலக்கணம் இலக்ஷியமுழுதினுமில்லாமை. அது, கொம்புடை யது குயில் எனின், கொம்புமையாய இலக்கணம் அக்குயில்கள் எவற்றினு மில்லாதிருத்தல் போலாம்.

தொடரும்,

---

உ

# கொல்லாமை.

பண்டித சித. நாராயணசாமி,
அறுபத்துமூவர் மடம், திருவையாறு.

'துறவி' என்பது துறவுநிலை குறித்தெழு மிதழாதலின் இதன்கண் துறவொழுக்கம் பலவற்று ளொன்றாகிய கொல்லாமையைப்பற்றி யெழுதல் சாலுமாதலினாலும், அது துறவிகட்குச் சிறந்ததாகிய தவத்திற்கு உறுப்பாக விளங்குத லாலும், அது தவத்திற் குறுப்பென்பதும், தவஉறுப்பாயுள் ளன பலவற்றுள்ளுஞ் சிறந்த வுறுப்பென்பதும் "உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை, யற்றே தவத்திற் குரு" "கொல்லா நலத்தது நோன்மை" என்பனவற்றால் தெளியப்படுதலாலும், கொல்லாமையைப்பற்றி, திருப்பேரையூர், திருவளர் சாந்தலிங்க சுவாமிகள் பாவடிவமாக இயற்றிய 'கொலை மறுத்தல்' என்னு நூலையும், அதற் குரை விரித்த திருப்போரூர், திருவளர் சிதம்பர சுவாமிகளின் நல்லுரையினையுந் தழுவி, யாவருமெளிதி னுணர்ந்து கொலை செய்யாமலிருந்து

துன்பவொழிவு இன்பவடைவு வடிவாகிய பெரும்பேறுற அதனை உரைநடையில் வினு விடையாக எழுத முன் வந்தனன். அறிவு சான்ருர் குற்றங் களைந்து குறைபெய்து கொள்வாராக.

வேதாகமங்களை மெய்ந்நூல்களென நம்புகின்ற சைவர் முதலிய அகச் சமயத்தார்களும், அவைகளை மெய்ந்நூல்களென நம்பாத வுலோகாயதர், சமணர், பௌத்தர் முதலிய புறச் சமயத்தார்களும், இக்காலத்துத் தோன்றிய கற்பனு சமயிகளும், இவர்களல்லாத வுலக மக்களும் ஓரிடத்திற் பெருங் கூட்டமாகக் கூடியிருந்தார்கள். அப் பெருங்கூட்டத்தினடுவே கலை நிரம்பிய திங்கள் மிளிர்வதுபோல நூலறிவு நிரம்பிய சைவாசிரியரொருவர் விளங்கித் தோன்றினர்.

அவரை யக்கூட்டத்திலிருந்த பக்குவியானவன் ஒருவன் நேர்வந்து பணிந்தெழுந்து கைகூப்பியவனுய் நின்று ஐய! இவ் வுலகத்திலே பலவேறு வகையாகக் காணப்படுகின்ற உயிர்த் தோற்றங்கள் யாவும் ஒன்றற்கொன்று உயர்வுந் தாழ்வுமாக இருக்குமா? எல்லா மொருதன்மையனவாக இருக்குமா? தேவரீர் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும் எனப் பணிவுடன் வினவினன்.

**ஆசிரியர்—,** அன்ப! அறிவுடைமையை ஒன்றற்கொன்று மிகுதியாகவுடைய நிலைத்திணை (தாவரம்) இயங்குதிணை (சங்கமம்)களென்று சொல்லப்படுகின்ற இருவகைப் பிறப்பி னுள், அறிவின் மிகுதியினலே நிலைத்திணைகளைப்பார்க்கிலும் இயங்குதிணைக ளுயர்ந்தனவாகும்; இயங்குதிணையுள்ளும் அறிவை மிகுதியாகவுடைய மக்களாகிய இயங்குதிணைப் பொருளே வுயர்வுடையதாகும் என்றனர்.

**மாணவன்—,** உணவு, புணர்ச்சி, தூக்கம், அச்ச முதலிய எல்லாம், எல்லா வுயிர்க்கும் ஒரு நிகரனவாக இருக்க, அவற் றுள் மக்கள்மட்டு மெல்லா வுயிர்ப்பொருள்களினு முயர்வுடைப் பொருளாகுமென் றுரைத்த லெப்படிப் பொருந்தும்?

**ஆசிரியர்—,** உணவு முதலியன மாடு முதலிய பிறவற் றிற்கு முரியவாயினு முணவு முதலியனவற்றைக் கொள்ளும் வகையில், மக்களுக்குப் பிறவுயிர்களைக் காட்டிலும் சிறப்புத் தன்மையுண்டு. அத்தன்மையுடைமையால் மக்கள் உயர்வுப் பொருளெனல் பொருந்தும்.

**மாணவன்—,** சிறப்புத் தன்மைகளாவன யாவை?

**ஆசிரியர்—,** உவர்ப்பு, புளிப்பு, துவர்ப்பு, கசப்பு, உவர்ப்பு, இனிப்பாகிய சுவைகளையுடைய பண்டங்களைத் தனித்தனி யாகவும் சேர்த்தும் அமைத்துண்டலும் தின்றலும் பருகலும் சுவையமைத்த தயிர்ச்சோறு, புளிச்சோறு, சர்க்கரைச்சோறு எட்சோறு, தேங்காய்ச்சோறு முதலியவற்றை யமைத் துண்ட

லும் தின்றலும் அழகுற யாக்கப்பட்டுத் தொங்குமஞ்சத்தில் பஞ்சணையிட்டு அதன்மேல் தலையணை காலணை கையணையிட்டுறங்குதலும், தழுவுதல் முதலிய அறுபத்துநான்கு செயல்களுடன் பெண்களோ டின்புறுதலும், வறுமை முதலியவற்றால் மனந் தளர்ந்தவிடத்து "தளர்ந்துழியுதவுங் கல்வி" முதலிய விரகினால் தளர்ச்சியை நீக்கிக்கொள்ளுதலும் முதலியனவாகும். இத்தன்மைகள் பிறவுயிர்கட் கின்மையால் இயங்குதிணைப் பொருள்களுள் மக்கள் உயர்வுடைப் பொருளாகுமென்க.

மாணவன்—, இம் மக்களுள்ளேயும் தாழ்ந்தவரு முயர்ந்தவரு முண்டோ!

ஆசிரியர்—, உண்டு.

மாணவன்—, அப்படியானால் தாழ்ந்தவர் யாவர்? உயர்ந்தவர் யாவர்? இது செய்தால் அச்செயல் நன்மை பயக்கும்? இது செய்தால் அச்செயல் தீமை பயக்கும்? என்று பகுத்தறியவல்ல பகுத்தறிவினைப் பெற்ற மக்களாகப் பிறந்தும் பலவுயிர்களையும் கொன்று அவற்றின் இறைச்சியைத் தின்று தங்களுடைய அழுக்குடலை வளர்ப்பவர் தாழ்ந்தவராவர்? உயிர்க்கொலை செய்தால் அந்தக் கொலைப்பாவம், செய்த வுடம்பழியவும், அழியாத வுயிர் யாங்காங்குச் செல்லுமோ ஆங்காங்கெல்லாம் விடாது பின்சென்று துன்புறுத்த வல்லதாகும்? இவ்வுடலோடு கூடி வாழும் வாழ்க்கை நிலையற்றதாகும். இந் நிலையற்ற வுடலை யூனைத் தின்று காப்பதற் கெண்ணுதல், நீர்க்குமிழிக்குப் பூண்கட்ட நினைத்தலை யொக்கும். ஆகையால் இவ்வழிவுபடு முடலைக் குறித்தோ ருயிரையுங் கொலை செய்தல் கூடாது? என்றுணர்ந்து வேறோருயிரினால் தமக்கோர் கேடு வரினும் அதற்கோர் கெடுதியையும் செய்யாதவரே உயர்ந்தோராவர்?

இவ்வாறு கேட்ட பக்குவிக்குச், சைவர் தலைமகன் பதிலுரைக்கும்பொழுது அங்கிருந்த வுலோகாயதருள் ஒருவன் எழுந்து, சைவர் தலைவரே! உயிர்க்கொலை செய்தால் அதனால் வருந் தாழ்வென்னை? என்று கேட்டனன்.

கேட்கச் சைவர் தலைவர், உலோகாயத! உயிர்களுக்கு நன்மை செய்தா லது புண்ணியத்தை (அறத்தை)த் தருமெனவும், தீமைசெய்தா லது பாவத்தை(மறத்தை)த் தருமெனவும் அறநூல்கள் கூறுகின்றன. கொலை செய்தலுக்கு மேம்பட்ட தீமையொன்றுமில்லை. இத் தலைசிறந்த தீமையைச் செய்தலால் தலைசிறந்த தீயவராகக் கொலைசெய்பவர் கருதப்படுகின்றனர். அவ்வாறு தீயவராகக் கருதப்படுதலே கொலையால் வரும் தாழ்வாகும் என்க என்றனர்.

(மேலுமவன் கேட்கச் சைவர் தலைமகன் விடையளிக்கின்றனர்).

தொடரும்.

உ

"**துறவி**" என்னும் திங்கள் வெளியீடு, "தமிழ்நாட்டுத் துறவிகள் சங்க" த்தின் சார்பில், இவ் விஜய ஆண்டு ஆவணித் திங்களில் வெளிவரத் தொடங்குகிறது.

துறவிகட்கும் இல்லத்தார்கட்கும் பயன்படக்கூடிய நிலையில் வேதாந்தம் சித்தாந்தம் முதலிய சாத்திரக் கருத்துக்களையும், பௌத்தம் முதலான பிறமதக் கருத்துக்களையும் தன்னுள்ளடக்கி வெளிவரும். ஒவ்வொரு தமிழ் மாதத்திலும் வெளியிடுவதெனத் தீர்மானித்திருக்கின்றனம். தமிழ்நாட்டுத் துறவிகள் சங்க நோக்கங்களில் வெளியீடும் ஒன்றாதலால், சங்கத்தைத் துவக்கி எட்டு ஆண்டுகட்டுப் பின்னர் வெளிவரவேண்டிய நிலையில் இருந்தது. இவ்வாண்டு இறைவன் திருவருள் கூட்டி வைத்திருக்கிறபடியால், அவனருட்டுணைகொண்டு இத் திங்கள் வெளியீட்டைத் துவக்கியிருக்கிறோம்.

இவ் வெளியீட்டை வெளியிடும் பணியில், சங்க அமைப்பாளர், சுவாமி அருணகிரிநாதர் அவர்களும், சங்கச் செயற்குழுவினர்களும், முக்கியமாக வியாசர்பாடி, கர. சிவப்பிரகாச சுவாமிகள் மடத்தின் தலைவராகிய, சங்கமூர்த்தி, தவத்திரு, முத்தானந்த அடிகளும், ஈடுபடும்படி வற்புறுத்தினதோடு, மற்றுமுள்ள துறவிச் சகோதரர்களும் என்னைச் சம்மதிக்கும்படியும் தூண்டினார்கள். நானும் உலகப்பணியென்ற நோக்கத்துடன் மறுக்காமல் உவந்து ஏற்றுக்கொண்டேன்.

"நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்ற குறிப்பில், என் பணியை இறைவனிடம் ஒப்படைத்து இப்பணியை, நடத்த முன்வந்துள்ளேன். இதற்கு ஆத்திக நேயர்களெல்லாம் இவ்விளங் துறவியை வளர்க்கும் வகையில் அன்பும் ஆதரவும் காட்டி வளரச் செய்வார்களென்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றேன்.

எறும்பூர்
சின்னமடம்,
5—8—53.

இங்ஙனம்.
**சுவாமி. ஞானானந்தா.**
பதிப்பாளர்.

உ

## 'துறவி' அன்பர்களுக்கும், பெரியோர்களுக்கும்

# அறிவிப்பு.

---

"துறவி" மிகக் கடுமையான இச் சோதனை உலகத்தில் எளிமையிற் பிறந்த குழந்தையாகிறது. மழையின்றி மண்ணின் ஈரம் அற்ருலும் மக்களின் மனத்திரம் அறவில்லை. நாத்திகம் தாண்டவமாடும் சமயத்தில் ஆத்திக விஷயங்களை இத் திங்கள் வெளியீட்டின் மூலம் பரப்பி ஆத்திகத்தை இயன்ற அளவில் உலகெங்கும் பரப்புவது துறவிகளின் கடமையாதலால், நம் தமிழ்நாட்டுத் துறவிகளின் மூலம் இத் துறவிக் குழந்தையையும் ஒவ்வொரு நாட்டிற்கு மனுப்பி மாறுபட்ட மனத்தினர்களை நல்வழியிற் புகுத்தவே இத் திங்கள் வெளியீட்டை ஆரம்பித்துள்ளோம்.

ஆத்திகர்களும் புலவர் பெருமக்களும் செல்வவந்தர்களும், இதற்குப் பேரன்பும் பேராதரவும் காட்டி, துறவிக் குழந்தையை வளர்க்குமாறு கேட்டுக்கொள்ளுகிருேம். பொருளாதார நிலைமைக்குத் தகுந்தபடி முதலில் இரண்டு பார(16-பக்க)த்தில் ஆரம்பித்துப் பின்பு நேயர்களின் ஆதரவிற்குத் தகுந்தபடி விரிவாக்கிக்கொள்ள நினைக்கின்ருேம்.

இத் "துறவி"யும் வளர்ந்தோங்குமாறு எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிருேம்

எறும்பூர்
சின்னமடம்.
வளையமாதேவி P.O.
சிதம்பரம் தாலுகா.
5—8—53.

இங்ஙனம்.
தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கம்
பொருளாளர்
**முத்தைய சுவாமிகள்.**

உ

# வாழ்த்து.

அந்தண ரென்னும் அறவோ ரநுபவத்தை
இந்த வுலகோர்க் கெடுத்துரைக்க—வந்த
"துறவி" வெளியிடுந் தூயதமிழ் நாடுந்
துறவறமும் வாழியமா தோ!

சுவாமி. அருணகிரிநாதன்,
த, நா. து. சங்க அமைப்பாளர்.

உ

# மெய்நெறி வெண்பா

காப்பு

உய்நெறியைத் தேர்ந்திங் குயிர்கள் கடைத்தேற
மெய்நெறிவெண் பாதமிழில் விள்ளுதற்கு—பொய்நெறியில்
உள்ளத் துணர்குவாய் ஓங்கும் பரம்பொருளை
வள்ளல் குருபரனை வாழ்த்து.

## நூல்.

எல்லாம் கடந்த இன்பமே கடவுளாம்.

1. இன்பமாய் அழிவிலதாய் எங்கு நிறைந்துளதாய்
அன்பாகித் தூய்தாய் அறிவுருவாய்—துன்பமே
இல்லாதாய் உள்ளமொழிக் கெட்டாதாய் பேர்வடிவம்
அல்லா ததுகடவு ளாம்.

2. எந்திரங்க ளெல்லாம் இயக்குமொரு காந்தம்போல்
இந்தவுல கெல்லாம் இயக்கியே—அந்தரம்போல்
தாக்கற்று நிற்குமொரு தத்துவமே ஆன்மாவாம்
நீக்கமற நிற்குமது நீ.

3. இருட்டில் விளக்கேந்தி இல்லெல்லாம் சென்று
சுருட்டுக்குத் தீக்கேட்டுச் சுற்றுங்—குருட்டுப்
பயல்போற் றனக்குட் பரம னிருக்க
அயல்போய்வீண் தேடியலை வார்.

4. கண்ணுற் கடலென்றுங் காணர்க்குச் சொல்வதெனில்
தண்ணீர்ப் பரப்பென்றே! தான்சொல்லலாம் விண்ணை
சேர்ந்தாம் இறையை நுவலென்ருல் வாக்குமனம் [விட
எய்தாப் பொருளதுவென் பேம்.

தொடரும்.

## தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத்தின் மூலம் ஆற்றவேண்டியதாக நிறைவேற்றப்பெற்ற தீர்மானங்கள்.

---

1. தமிழ்நாட்டுத் துறவிகள் அனைவரும் தமது சமயப் பிரிவுகளுள் வேற்றுமை பாராட்டி ஒன்றையொன்று இகழாமல் பொதுவாக மக்கள் தத்தம் சமயநெறியிற் றவருது நிற்கச் செய்தல்.

2. தமிழர் சமயங்களாகிய 'சைவம்' 'வைஷ்ணவம்' 'சுத்தாத்வைதம்' 'அத்வைதம்' இவைகளின் சிறப்புக்களையும், அதனதன் உண்மைப் பொருள்களையும் உள்ளவாறறியாமல் பிற மதத்தவர் பொய்ப் பிரசார சூழ்ச்சி வலையில் அகப்பட்டு மாருத வண்ணம் நமது சமயங்களின் உண்மைகளையும் சிறப்புக்களையும் ஆங்காங்குச் சென்று எடுத்துரைத்தல்.

3. பிற சமயத்தவர் பொய்ப்பிரசாரச் சூழ்ச்சி வலையிலகப்பட்டு மத மாறி அல்லற்படும் மக்களுக்கு வேண்டிய உலகியலுதவிகளனைத்தையும் அளித்து, நம் சமயங்களுக்குள்ள தீட்சைகளையும் செய்து நம் சமயங்களில் சேர்த்துக் கொள்ளல்.

4. சமய உரிமைகளைப் பறித்து ஒதுக்கப்பட்டுள்ள தமிழ் மக்களே பெரும்பாலும் பிற சமயங்களுக் குரியவராக மாறுகின்றனராதலால், நமது சமய மக்களின் தொகை வரவரக் குறைந்துகொண்டே வருகின்றது. அதனல் பிற சமயத்தவர்க்கு ஆதிக்கமும் ஒற்றுமையும் உண்டாகின்றன; நம் சமயத்தவர்க்கு ஆதிக்கக் குறைவும் ஒற்றுமையின்மையும் ஏற்பட்டுவிட்டன. ஆதலால், அது தீரவேண்டி தாழ்த்தப்பட்ட மக்கள் அனைவருக்கும், தீண்டாமை ஒழிதற்குரிய இன்றியமையா ஆக்க வேலைகள் செய்து சமய உரிமைகளை அளித்தல்.

5. இச் சங்கத்தின் உறுப்பினராகிய துறவிகள் தமிழகத்தில் எவ்வெப் பகுதிகளிலிருந்தாலும, அவ்வப் பகுதிகளிலுள்ள சிற்றூர்களிலும், நகரங்களிலும் வாழும் மக்களுக்கு கல்வி கற்பித்தல், மருத்துவஞ் செய்தல், சமய போதனை செய்தல், கோயில் மடங்கள் முதலியவைகளில் பூசனை, தொண்டு முதலியவைகள் செய்தலாகிய தொண்டுகளுள் யார் யார் எவ்வெத் தொண்டுகள் செய்ய இயலுமோ அவரவர்கள் அவ்வத் தொண்டுகளை இச் சங்கத்தின் சார்பில் பயனுறச் செய்தல்.

6. மேற்கண்ட நோக்கங்களைச் செவ்வனே நடைபெறச் செய்ய தமிழ் மாநில முழுவதுக்கும் பொதுவாக "தமிழ்நாட்டுத்

துறவிகள் சங்கம்'' என்னும் இப்பெயரைச் சட்டப்படி பதிவு செய்தல்.

7. இச் சங்கத்தில் நமது தமிழ்நாட்டிலுள்ள துறவிகளனைவரும் ஆண்டுக்கு ஒரு ரூபாய் விதம் கட்டணம் (சந்தா) செலுத்தி உறுப்பினராயிருத்தல்.

8. இச் சங்கத்தின் நடைமுறைகளையும் சமய உண்மைகளையும் தமிழக முழுவதும் அறிய ஒரு "திங்கள் வெளியீடு" நடத்துதல்.

9. இச் சங்கத்தின் ஆண்டு விழாவை ஆண்டுதோறும் நடத்தி அறிக்கை வெளியிடல். சங்க நோக்கங்களைச் செவ்வனே நிறைவேற்ற எழுவரடங்கிய 'உடன்பட்ட செயல் நிறைவேற்றுக் குழு' ஒன்றை அமைத்தல்.

10. இந்து ரிலிஜியஸ் எண்டௌமெண்ட்ஸ் ஆக்டை (Hindu Religious Endowments Act) திருத்தஞ் செய்வதன் மூலம் இந்து அறப் பாதுகாப்பு நிலையங்களுக்குள்ள உரிமை மிகமிகப் பறிமுதல் செய்யப்படுகிறது. இந்நிலைமை யேற்படுமேல் இந்து சமய அறநிலையங்களின் அறங்கள் செவ்வனே நடைபெறாமல் தடைபட்டுவிடுமாகையால் இத்தகைய சட்டம் அமுலுக்கு வரக்கூடாதென இச் சங்கம் அரசாங்கத்தாரைக் கேட்டுக் கொள்கிறது.

---

## வேண்டுகோள்.

---

மேற்கண்ட சங்கத் தீர்மானங்களைக் கண்ணுறும் தமிழ்நாட்டுத் துறவிகளனைவரும், இச்சங்கத்தில் உறுப்பினராகச் சேர்ந்து, ஒத்துழைத்து, மேற்கண்ட சங்க நோக்கங்களைச் செயலில் நிறைவேற்றி, நம் மக்களுக்கும், நம் சமயங்கட்கும், ஆக்கத்தை யுண்டுபண்ண முன்வருமாறு எல்லாம் வல்ல இறைவன் இன்னருள் புரிய வேண்டுகிறேன்.

மேற்கண்ட இச் சங்க நோக்கங்களைக் கண்ணுறும் தமிழ்நாட்டு மக்களும் பிறரும் இச் சங்க வளர்ச்சிக்குரிய பாதுகாப்பாளராகி ஒல்லும் வகையால் உதவி புரிந்து, சங்கத்திற்கு ஊக்கமளித்து உறுதுணையாயிருக்க எல்லாம்வல்ல இறைவன் திருவருள் புரிய வேண்டுகிறேன்.

இங்ஙனம்,
சுவாமி. அருணகிரிநாதர்.
சங்க அமைப்பாளர்,
கோளப்பாக்கம்.

---

Printed By. Rm. Natarajan Chettiar, at Pandian Press, Chidambaram.
Edited and Published by Swami Gnanananda "Chinnamadam", Erumbur.